# கடவுள்

[பத்திராசிரியர்]

நாம் அறிவினை யுடையவர்கள். நாம் அறியும் பொருள்கள் பல உள; அவை சுருக்கமாக இருவகைப்படும். நம்மால் சுட்டி. அறியப்படும் பொருள், சுட்டி அறியப்படாத பொருள். இதில் முதற்கூறியது ப்ரபஞ்சமாகும், இரண்டாவது கடவுள். நம் அறிவினாலறியப்படாத பொருள் கடவுள். என்பதாலே சுட்டி அறியப்படும் பொருள். .................அறியக்கூடிய பொருள். ப்ர = நன்றாக; ......................'றது. சுட்டி அறியப்படும் ப்ரபஞ் ....................... அறியப்படாத கடவுளை அறிதல் ப்ரபஞ்சம் இருவகைப்படும். 1. சப்தப்ரபஞ்சம் ஜலம், உலகம், நெருப்புப் போன்ற சப்தத்தையுடையன. 2. அர்த்த ப்ரபஞ்சம். அச்சப்தத்தாலுணர்த்தப்படும் பொருள்களே அர்த்தப்ரபஞ்சம். சப்த ப்ரஞ்சம் ஒலிவடிவமாயுள்ளது. அர்த்த ப்ரபஞ்சமோ அவ்வொலி யுணர்த்தும் பொருளா யுள்ளது.

கடவுள் நம் கண்ணால் காணக்கூடாத மனதால் அறிய முடியாத பொருள். அவரை எப்படி அறிதல்வேண்டும்? இதற்கு இரண்டு வழிகள் உள்ளன. முதலாவதாக நாம் இதற்கு முன் அனுபவித்திருக்கிற அனுபவங்கொண்டு ஊகித்து ஒரு பொருளை அறிதல். இரண்டாவதாக நாம் யாரை நம்பியிருக்கிறோமோ அவர்கள் வார்த்தையைக் கொண்டு அறிதல்.

எழுதி வைத்துப்போன நூல்களைக் கொண்டோ அல்லது ஒரு சாரார் சொல்லும் வார்த்தைகட்காகவோ நாம் கடவுள் உண்டு என்று எல்லோரையும் ஒத்துக்கொள்ளச் செய்ய முடியாது. ஆகையால் கண்ணிற்கும் மனத்திற்கும் எட்டாக் கடவுளைக் கூடியவரை புத்தியால் உணருவதே சிறந்ததாகும். கண்ட குடத்தைக் கொண்டு காணாத குயவனை நிச்சயித்தல் போல கண்ட உலகத்தைக் கொண்டு காணாத கடவுளை நிச்சயிக்க வேண்டும். பார்த்த மண்ணை யாரோ ஒருவன் குடமாகச் செய்திருக்க வேண்டும். அறிவில்லாத மண் தானே குடமாகாது. ஆகையால் அறிவுடைய ஒருவனே குடமாக்கி இருக்க வேண்டும். மண் அறிவற்றது என்பதே இம்முடிவிற்குக் காரணமாயுள்ளது.

ப்ரபஞ்சம் ஜடமா? சித்தா? அதாவது அறிவற்றதா? அறிவுள்ளதா? உலகம் இருக்கிறது. ஜடமாயிருக்கிறது. ஆகையால் யாரேனும் செய்திருக்க வேண்டும் என்ற முடிவிற்கு வரவேண்டியிருக்கிறது. கடவுள் அறிவு அகண்டம். நம் அறிவு கண்டம், தடைபட்டது. குடம் ஜடமாயும் அவயவத்தையுடையதாயு மிருக்கிறது. உலகம் ஜடமாயும் அவயவங்களாயுமிருக்கிறது. குடத்திற்கு அடி, நடு, கழுத்து முதலிய உறுப்புக்கள் உள்ளன. உலகத்திற்கும் அவன், அவள், அது என்ற உறுப்புக்கள் உள்ளன.

## கடவுள்

அவன் அவள் அது எனும் அவை மூவினைமையில்
தோற்றிய திதியே ஒடுங்கி மலத்து உளதாம்
யாம் ஆதி - என்மனார் புலவர்.

சித்தாந்தம் - 1943 ஹ - ஜூன் மீ